[30th March 1961

*Damages caused to lakes by rain*

***1198 Q.—SRI M. P. SARATHI** : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீப பருவ மழையினால் எத்தனை ஏரிகள், குளங்கள், எங்கெங்கு சேதமடைந்தன ?

(இ) மழைக் காலத்தில் ஏரிகளை ஏரியாக கண்காணிக்க என்ன ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : (a) & (b) A statement [a] is laid on the table of the House.

SRI M. P. SARATHI: ஸார், இராமநாதபுரம் மாவட்டத்தில் 436 ஏரிகளில் உடைப்பு ஏற்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவைகள் எல்லாம் இப்போது என்ன நிலைமையில் இருக்கின்றன ? அவைகள் சீர்படுத்தப் பட்டதா என்பதையும் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : உடைந்த ஏரிகளையெல்லாம் ரிப்பேர் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறோம். ஒருசில இடங்களில் பெரிய உடைப்பு ஏற்பட்டிருந்தால், அவைகளுக்கு ரிவெட்மெண்ட் போட்டு, தண்ணீரைத் தேங்கவைத்து, வெயில்காலத்தில் செப்பனிட அரசாங்கம். ஏற்பாடு செய்திருக்கிறது.

SRI R. SRINIVASA IYER : தஞ்சாவூரில் சில ஏரிகள் உடைந்த நிலையில் இருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லாவில் சங்கரநாராயண ஏரி உடைந்து போய்விட்டது. அது தவிர சப்ளை சானல்கள் மூன்று இடங் களிலே உடைந்துபோய்விட்டன. அவைகள் ரிப்பேர் செய்யப்பட்டு விட்டனவா ? சப்ளை சானல்களை உடனடியாக ரிப்பேர் செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : எங்கு உடைப்பு ஏற்பட்டாலும் அவைகளை ரிப்பேர் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கனம் அங்கத் தினர் அவர்கள் கூறும் ஏரி சம்பந்தமான தகவல் இப்போது என்னிடம் இல்லை.

SRI K. VINAYAKAM : சென்னைக்கு அருகாமையில் உள்ள செம்பரம்பாக்கம் ஏரி உடைப்புகளைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்றால், "like a democles sword always hanging on a person" என்று சொல்லலாம். எப்போது மழை பெய்கிறதோ, அப்போதெல்லாம் உடைந்து விடுகிறது. அதன் விளைவாக சென்னை நகரத்திற்குள்ளே தண்ணீர் வந்து விடுகிறது என்ற ஒரு அபாயமும், பயமும் காணப்படுகிறது. ஆகவே அதற்கும் ரிவெட்மெண்ட் போட்டு, பலப்படுத்துவதற்கு முயற்சி எடுக்கப் படுமா ?

THE HON. SRI P. KAKKAN : செம்பரம்பாக்கம் ஏரிக்கு ஏற்கனவே ரிவெட்மெண்ட் போடப்பட்டு இருக்கிறது. இப்போது எந்தவித மான ஆபத்தும் வராது என்று அரசாங்கம் கருதுகிறது. அதல்லாமல் அங்கு ஸ்பெஷல் ஸ்டாப் போடப்பட்டு, ஆபத்து ஏற்படாமல் செய்வதற்கு அங்கு அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

*Rural Housing Scheme (details)*

*** 1199 Q.—SRI A. VEDARATHNAM**: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஜாகை வசதிக்காக ஒதுக்கிய தொகை எவ்வளவு ?

(இ) இதுவரை எத்தனை வீடுகள் எவ்வளவு செலவில் கட்டப்பட் டிருக்கின்றன ?

(உ) திட்ட காலத்திற்குள் ஒதுக்கிய தொகை பூராவும் பயன்படுத்திக் கொள்ள என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

---

[a] Printed as Appendix V on pages 529–530 infra.